உ
சிவமயம்.



# கன்னியாகுமரி ஸ்தல புராணம்.

ஸ்ரீ கந்த புராணத்திலிருந்து
பெயர்த்தெழுதப்பட்டது.

---

True Translation & Travancore Govt.
R. Dis. 1046/40/P. R.

**K. A. THANU IYER,**
ANANDA BHAVAN,
CAPECOMORIN.

---

*6th Edition 1000 Copies.*

Price 6 As. விலை 6 அணா.

உ

ஸ்ரீராமஜெயம்.



# கன்னியாகுமரி ஸ்தல புராணம்.

## விநாயகஸ்துதி.

கஜானனம் பூதகணாதி ஸேவிதம்
கபித்தஜம்பு பலஸார பக்ஷிதம்
உமாசுதம் சோகவிநாச காரணம்
நமாமி விக்நேஸ்வர பாத பங்கஜம்.

## விருத்தம்.

1 பக்தர்க் கன்பு கூர்ந்து பரிந்து பேரின்பம் நல்கும்
உத்தம குணத்தாயுள்ள ஒளிர்மை சுடரே
உள்ளம்கைத்தலம்வைத்தநெல்லிக்கனியெனயாவும்காணும்
சக்தியே எமைகாப்பாய் தஞ்சமுன் சரணமம்மா.

2 மண்ணென புனலதென்னவன் காலென்ன
விண்ணெனவேதமென்னவேதம்சொல்பொருள்தானென்ன
பண்ணென யியலதென்ன பலபல கலைகளென்ன
எண்ணுதற்காய தாயே நாங்கள் உன்சரணமம்மா.

3 படைப்பதும் அழிப்பதும் பின்படைத்து அழித்துஉள்ளதெலாம்
துடைப்பதுமாய் மும்மைதொழிலுளா தொழில் ஒன்றிலா
உடப்பரும் உலகயாவும் ஒழிவுபட்டழியும் அந்த
கடைத்தினத்து உள்ளம் காணும் காக்ஷியாய் சரணம் அம்மா.

4 மாயவன் தங்கையாயும் மலைமகளாயும் முக்கண்
தூயவன் தேவியாயும் தொல்லுலகெலாம் தோற்ற
ஆயதோர் அன்னையாயும் அபரன்றிகன்னியாயும்நீ இவ்வாறு
உற்றதேவி நினக்கு நாங்கள் சரணம் அம்மா.

5 தஞ்சமுன்பாத தாயே கதியென்று சார்ந்தவர்மேல்
வஞ்சனையிலாக் கொடியே வல்சூனியம் வைத்தவரை
நெஞ்சப்பிளந்து ரிணகுடல் வாங்கி நெருப்பிலிட்டு
அஞ்சக்கறங் கொண்டறுப்பாயிதிரை புரையானந்தியே

6 அத்திமா முகத்தோனுக்கு மன்னையே அடிமையை விலை
கொண்டவளல்லவ புத்தி வித்தை சகலதுந் தந்து
நீ போய் களவு கொலை நீக்குவாயி
சக்தி காச்சல் தலைவலி வல்வினை சகலமான பிணி
நோயிஇ ரகங்கள் பக்தி வந்தெனை யணுகாமல்ரெ
க்ஷிப்பாயி பத்ரகாளி பராக்றமவல்லியே தேவர் முனிவர்
முன்னுளில்முடி தரித்து மதுரையாண்ட முக்கன்னி.

7 மூவரையுமீன்றெடுத்த முதல்வியான கன்னல்மதன்றனை
தெரிக்க தயவுசெய்த காமாக்ஷி கன்னிகர் தனி
விருந்து தவங்கள் செய்யும் பெ ன்னபர் தனக்
காக வேலைசெய்யும் பொற்கொடியே யெமின்
பொன்னே யின்னுளிலெனக்காக கிருபை
செய்வாயீசுவரி யுன்னிருபதத்தை யிறஞ்சினேனே.

8 வாணனுடத்தலையறுத்த கதையைச் சொல்ல
வரம் வேண்டி யடி தொழுதேன்
மாலொன்றங்காயி சேணுடர் தினமும் வந்து தொழுது
போற்றுந் தென்குமரிப் பகவதியே சிவன்றன் றேவி
வேணுடு தளைப்பதற்கு வீற்றிருந்து தவம்புரியும்
வேதவித்தே — தாணுவெனும் பேர்படைத்த உன் பால
னுக்கு சகலவினை தீருதற்கு தயை செய்வாயே.

9 திருநகர்க்குமரி தலவிஷேடத்தை சிந்தையில்
விருப்புறக்கேட்டோம் யிரு நிதிக்குப்பேரரெனத்
தவம் படைத்தே யிதமுறு புதல்வாகணல்லான்
மருவிய சுத்தத்தோடு மினிதிருந்து மனதினினினைத்
தவையடைந்து—பெருகியவளத்தோடிருப்பர் பின்னே
வரும்—பெறலருங்கதியினைப் பெறுவார்.

10 ஆதலால் குமரி முழு விசேடத்தை அறியக் குமரியென்
றுரைக்குங்கோதிலா நகரின்நாட்டத்தின்சிறப்புக்குறுகென்
முன்னெனக்கூறி தீதிலாக்குருவை யருட்கணபதியை
செஞ்சடைக் கடவுளை மாலை தீதியான்
மனத்தினினைந்தருண் முனிவென் நேயமிக்கா
சனுக்கு ரைப்பான் மன்னர் மன்ன விரும்பி நீ
கேட்ட மகிமைசேர் குமரியென்றுரைக்கும்
நன்னகரெந்தநாட்டகத்துள்ள நகரெனின் நன்
மதிகுலத்து மன்னுஞ் சிறப்பு மன்னராண்டிருக்கும்
பாண்டி நன்னுடெனப்பகர்வ—அன்னெடுந்
திருநாடங்கத்தின் மகிமையறிந்தி லசிறுதறைகுவனுல்.

---

அத்தியாயம் 1.

# குமரி என்னும் பெயரின் வரலாறு.

---

'இத்தலம் குமரி என்றழைக்கப்படுவதற்கு காரணம்' பதினெண் புராணங்களில் ஒன்றாகிய கந்த புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இப்புவியின்கண் விளங்குகின்ற ஓர் அண்டத்தின் உயர்ச்சியும், விசாலமும் ஐம்பது கோடி யோசனை தூரம். இவ்வண்டத்தின் மேலே ஏழுலகமும், கீழே ஏழுலகமும் உள்ளன. அவ்வுலகங்கள் அண்டப் பித்திகை வரைக்கும் ஐம்பதுகோடி யோசனை தூரங்களுள்ளன. இத்தகைய பூமிக்கு மத்தியிலே மகாமேரு மலையிருக்கின்றது அந்த இடம் இப்பூமியிலி

ருந்து ஐம்பது கோடி யோசனை தூரத்திலிருக்கிறது. அம் மலையின் மேல், ஒவ்வொன்றும் இருபத்தையாயிரம் யோசனை தூரங்கொண்ட மூன்று தட்டுகள் உள்ளன. கீழ்த் தட்டின் விரிவு பதினாயிரம் யோசனை தூரம், நடுதட்டின் விரிவு பதினாலாயிரம் யோசனை தூரம், இவ்விரு தட்டு களிலும் சித்தர், சிங்கர், தேவர் வசிப்பவர்கள். மேற்தட்டு பதினெண்ணாயிரம் யோசனை தூர விரிவுள்ளது. அத்தட்டின் பெயர் சக்கரவாடம் அதன் எட்டு திசை களிலும் எட்டு கொடுமுடிகள் உண்டு. அமராபதி என்றழைக் கப்பட்ட கீழ் திசையில் இந்திரனும், தேசோபதி என்றழைக்கப்பட்ட அக்கினி திசையில் அக்கினி தேவனும், யமுனி என்ற தென்றிசையில் எமனும், தைத்தியபதி என்றழைக்கப்பட்ட கன்னித் திசையில் நிருதியும், சுத்தபதி என்ற மேற்குத் திசையில் வருண னும், கந்தபதி என்ற வடமேற்குத் திசையில் வாயுவும், மஹோதயம் என்ற வடதிசையில் சந்திரனும், ரஸாபதி என்ற வடகிழக்குத் திசையில் ஈசானனும், அவரவர் பரி வாரங்களுடன் வீற்றிருப்பார்கள். ப்ரமதேவர் இவ்வெட்டு திசைகளுக்கும் நடுவில், ஏழாயிரம் யோசனை விஸ்தீர முள்ள, மனோவதி என்ற பட்டணத்திலே இருப்பார்.

மனோவதிக்கு வடகிழக்கிலே இருக்கும் சோதிளக்கம் என்ற கொடுமுடியில் விநாயகர், கந்தர், நந்தி, மாகாளர், மகேஸ்வ்ரர் இருப்பார்கள், இத்தகைய மேருமலைக்குத் தென் பார்சத்தில் நிடதம், எமகூடம், இமகிரி என்ற மூன்று மலைகளுண்டு. அவற்றில் ஒவ்வொன்றின் உயர முட் பதினாயிரம் யோசனை. வட பக்கத்தில் நீலமலையும், கிருங்க மலையும் உள்ளண. ஒவ்வொன்றும் பதினாயிரம்

யோசனை தூரமுள்ளது. கீழ்ப் பக்கத்திலே மலியவான் என்ற மலையும், மேல் பக்கத்திலே கந்தமாதன மலையும், ஒவ்வொன்றும் பதினுயிரம் யோசனை தூரமுள்ளது. மாலியவானுக்கு மேற்கும், கந்தமானத்திற்கு கிழக்கும், நீலமலைக்குத் தெற்கும், நிடத மலைக்கு வடக்குமுள்ள பூமியே இளாவிருத கண்டமென பெயர்பெறும். அதிலே நாற்றிசையிலும், நான்கு மலை மேரு மலைக்கு அடைக் கல்லாக நிற்கும் கீழ்ப்பக்கத்திலேயுள்ள வெண்மை மந்திர மலையிலே கடம்ப விருட்சமொன்று, ஆயிர யோசனை தூர உயரமுள்ளது, அம்மலையின் கீழே வருணோதக தீர்த்த மும், சயித்திராத வனமுமுள்ளன. தென் பக்கத்திலே கந்தமாதன மலையிலே ஆயிர யோசனை தூரமுயர்ந்த நாவல் விருட்சத்தில் பழச்சாறு சொர்ண நதியாகி மேரு மலையை சுற்றி செல்லா நிற்கும். அம்மலையின் நடுவிலே மானத சரசு தடாகமும், மானத வனமுமுள்ளன. மேல் பக்கத் திலே நீலமலையின் மேலே, ஆயிரம் யோசனை தூரமுயர்ந்த அரச விருட்சமும், அம்மலையின் நடுவிலே சீதோதவாவி யும், வைப்ராச நந்தவனமும் உள்ளன. வடபக்கத்திலே சுபாரிசுவ மலையின் மேலே ஆயிர யோசனை தூரமுயர்ந்த ஆல விருட்சமும் அம்மலையினடியிலே பத்திரக தடாகமும், குளிர் என்ற சோலையும் உள்ளன. இந்த இளாவிருத கண்டத்திலே, தங்கியிருப்பவருக்கு ஆயுள்நாள் பதின் மூவாயிரம் வருடங்களாகும். அவர் பொன் நிறமுடையவர். நாவற் பழச்சாறு அவர் உணவு. இந்த சாருகிய சாம்பு நதி ஓடுவதாலே இந்த நடுத் தீவிற்கு நாவல் தீவு என்று பெயர் சொல்லுவர். மாலியவானுக்கு கிழக்கும், கீழ்க் கடற்கு மேற்குமுள்ள பூமி பத்திராசுப கண்டமெனப்

படும் அதிலிருப்பவருக்கு ஆயுள் நாற்பதினுயிரம் வருடங்களாம் அவர் சந்திரோதயம் போன்ற நிறமுள்ளவர். அவர் உணவு நீலோற்ப மலர். கந்தமாதனத்தின் மேற்கும் மேல் கடலுக்கு கிழக்குமுள்ள பூமி சேதுமால கண்டமெனப்படும். அதில் இருப்பவரின் வாழ்நாள் பதினுயிர வருடம். அவர் நீலோற்ப நிறமுள்ளவர். பலாக்கனியே அவர் உணவாகும். நீலமலைக்கு வடக்கும் சுபேதகிரிக்கு தெற்குமுள்ள பூமி இரமிய கண்டமெனப்படும். அதிலிருப்பவரின் வாழ்நாள் பன்னீராயிர வருடங்கள். அவர் நீலோற்பவ நிறமுள்ளவர். ஆலம்பழம் புசிப்பவர் சுபேதகிரிக்கு வடக்கும் சிருங்க வரைக்கும் தெற்குமுள்ள பூமி இ ர ணி ய கண்டமெனப்படும். அதிலிருப்பவர்களுக்கு ஆயுள்நாள் பன்னீராயிரம் வருடங்கள். அவர் சந்திரன் போன்ற நிறமுள்ளவர். எலுமிச்சம் பழச்சார் அவர் புசிப்பவர். சிருங்கவரைக்கும் வடக்கும் வட கடலுக்கு தெற்குமுள்ள பூமி குரு கண்டமெனப்படும். அதிலிருப்பவர் வாழ்நாள் மூவாயிரம் வருடங்களாம். அவர் பச்சை நிறமுள்ளவர். பிரியமான கனிகள் புசிப்பவர்.

மேரு மலைக்குத் தென் பக்கத்திலே நிடதகிரிக்குத் தெற்கும் ஏமகூட மலைக்கு வடக்குமுள்ள பூமி அரிகண்டமெனப்படும். அதிலிருப்பவர் வாழ்நாள் பன்னீராயிரம் வருடங்களாம். அவர் நிறம் வெண்மை. உணவு கருப்பஞ்சாறு. அவருக்கெப்போதும் பருவங்களின் வேற்றுமையில்லை. ஏமகூட மலைக்கும், இமைய மலைக்கும் இடையிலுள்ள பூமிக்கும் புருட கண்டமெனப்படும். அதிலுள்ளவர் வாழ்நாள் பதினுயிரம் வருடங்கள். அவர் பொன்நிறமுள்ளவர். அத்திப்பழம் புசிப்பவர். இந்த எட்டுத்திசை

யிலும், எட்டுக் கண்டத்திலும் இருப்பவர்களுக்கு நரை, திரை, மூப்புகளில்லை. நான்கு யுகத்திலும் அவர்களுக்கு அறிவும் பலமும் குறையமாட்டா. இமய மலைக்கு தெற்குந் தென் கடலுக்கு வடக்குமுள்ள பூமி பாரத கண்டமெனப் படும். அதிலுள்ளவருக்கு உணவு அன்னமாதிகள். அவர் வாழ்நாள் நூறு வருடங்கள். புண்ணிய பாவ பலன்களை அனுபவிப்பர். இந்த பூமியே சம்புத்தீவு. இத்தீவும் இதைச் சூழ்ந்த உப்புச் சமுத்திரமுந் தனித்தனி லக்ஷ யோசனை தூரமுள்ளது. இந்த சமுத்திரத்தைச் சூழ்ந்த சாகாத்தீவும் அதைச் சூழ்ந்த பாற் சமுத்திரமும் தனித்தனி இரண்டுலக்ஷ யோசனை தூரமுள்ளது. அத்தீவை சூழ்ந்த தயிர் கடலும் தனித்தனி நாலுலக்ஷ யோசனை தூரமுள்ளது. அதைச் சூழ்ந்த கிரவுஞ்ச தீவும் அத்தீவைச் சூழ்ந்த நெய் கடலும் தனித்தனி எட்டுலக்ஷ யோசனை தூரமுள்ளது. அதைச் சூழ்ந்த தீவும் அத்தீவைச் சூழ்ந்த கருப்பஞ் சாறு கடலும் பதினாயிரலக்ஷ யோசனை தூரமுள்ளது. அதைச் சூழ்ந்த புட்கரத் தீவும் அத்தீவைச் சூழ்ந்த நல்ல தண்ணீர் கடலுந் தனித்தனி அறுபத்து நான்கு லக்ஷ யோசனை தூரமுள்ளது. அக்கடலுக்கு அப்புறமுள்ள பொன்னுலகம் பத்துக்கோடி யெண்பதினாயிரம் யோசனை தூரமுள்ளது. அவ்வுலகத்தைச் சூழ்ந்த சக்ரவாள மலை பதினாயிரம் யோசனை தூரமுள்ள இடத்தையுடையது. அம்மலைக்கு வெளிப்புறத்திலுள்ள நிலமாகிய வெற்றிடம் முப்பத்தைந்து கோடி எண்பத்தெட்டு லக்ஷத்து நாற்பதி னாயிரம் யோசனை தூரமுள்ளது. அவ்விடத்தைச் சூழ்ந்த பெரும்புறக் கடல் ஒருகோடி இருபத்தி ஏழுலக்ஷம் யோசனை தூரமுள்ளது. அதற்கப்புறமிருக்கிற அண்டச் சுவர் ஒரு

கோடி யோசனை தூரங் கனமுள்ளது. இவைகளையெல்லாம் கணக்கு சேர்த்தால் ஐம்பது கோடி யோசனை தூரமாகும் மேருவின் வடபக்கமும் அவ்வளவினையுடையதாகும். மேரு வுக்கு மேல் பக்கமும் கீழ்ப்பக்கமும் தனித்தனி ஐம்பது கோடி யோசனை தூரமுள்ளது. மேற் கூறிய தீவினுள் நடுத்தீவாகிய நாவன் தீவிலிருந்து அரசுபுரிந்த சூரிய குலத்து ஆக்கிநேத்திரனென்னும் அரசனுக்கு ஒன்பது புத்திரர்களிருந்தனர். அவ்வொன்பதின்மருக்கும் அரசன் ஒன்பது தீவுகளையும் தனித்தனி ஒவ்வொன்ருகக் கொடுத் துக் காக்கும்படி செய்தான். அவ்வொன்பதின்மர் பெயர் களே அத்தீவுகளுக்கு காரணப் பெயர்களாயின. தென் பக்கத்திலே பாரத கண்டத்தைப் பரதனென்பவன் ஆண்டு வருங்காலத்தில் அவனுகு இந்திரன், கசேரு, தாம்பிர பருணன், கபத்திமா, நாகள், சந்திரன், கந்திருவன், வரு ணன் என்று சொல்லப்பட்ட எட்டுப் புத்திரர்களும் குமரி என்ற ஒரு புத்திரியும் பிறந்தனர். இவ்வொன்பது பிள்ளை களுக்கும் பரதனுகிய அரசன் பாரத கண்டத்தை ஒன்பது பாகமாக்கி தனித்தனி கொடுத்து ஆண்டுவரும்படி செய்த னன். அவைகளுக்குள்ளே தென் பாகத்தைக் **குமரி** என் பவள் ஆண்டு வந்தனள். ஆதலால் அத்தலத்துக்குக் குமரியென்னும் பெயர் வந்தது. அத்தலத்திலே விஷ்ணு மூர்த்தி தங்கையாகிய கன்னிநாயகி தவஞ் செய்திருந்தா ளென்ருல் தன் பெருமையை யாவர் சொல்ல வல்லவர்.

---

அத்தியாயம் II.

# கைலாசச் சுருக்கம்.

---

திசைகளெல்லாம் துதிக்குங் கயிலாயமலை, மலைகளுக் கெல்லாம் உயர்ந்தது. வெள்ளிமலையென்னும் பெயருடை யது. சிவபிரானெழுந்தருளியிருக்கப்பெற்றது. சித்தர் முனிவர் யோகிகள், தொண்டர்கள், சிவன் முத்தர் யுகாந்த காலத்திலுமழியாத நித்தியர், கணங்களோடு நிறைந்திருக் கப்பெற்றது. மலைகடல் நிலைகுலையுங் காலத்துங்கெடாத நிலையுள்ளது அம்மலையின்று மேற்பக்கத்துப் பரவு மொழி களை சூரிய சந்திர நட்சத்திரங்களென்று சொல்லுவார். அம் மலையின் பக்கம் வரும் சந்திரன் முதலியோர்களை பகுத் தறிய முடியாது. வேதவோசையும், வீணையினெலியும், பாடுமிசையும், மிருதங்க முழக்கமும், தேவப்பெண்கள் நடிக்குமோதையும், தேவர்கள் வாழ்த்தொலியும் நிறைந்தது அங்கே சஞ்சரிக்கும் யானைகளெல்லாம் அம்மலையின் வெள் ளியவொளி பாய்தலாலே இந்திரன் வெள்ளை யானையைப் போல் காணப்படும். பன்றிகள் அம்மலையின் வெண் ணிறத்தால் மூடப்பட்டு அசுரன் கொண்டுபோன பூமியை யெடுத்து வந்த விஷ்ணுவாகிய வெள்ளைப் பன்றியைப் போலத் தோன்று நிற்கும். அக்கைலாசத்தின் வெண் ஜோதியாற் பொதியப்பெற்ற கற்பக விருக்ஷங்கள் புழுதி படியாமல் வெண்பட்டாலாகிய சட்டை போர்த்தது போலத் தோன்றும். அம்மலையின் வெள்ளியவொளியால் மாலையில்

மலரும் பூக்களெல்லாங் காலையில் மலர்ந்தன. பகற்காலத்து மலர்ந்த மலர்களெல்லாம் குவிந்தன. இதுவன்றி பலஜாதி மலரும் வேறுபாடறியப்படாமலே வெண்ணிறமாகவே காணப்படா நிற்கும். அம்மலைச் சந்திரனையளாவலாலும் விருக்ஷங்களினிழல் தங்குதலாலும் மேலே பொருந்திய அனேக மூங்கில்கள் பிரகாசித்தலாலும் நான்காகிய கிளைகளுடைய வேதங்கள் நிலைபெறுதலாலும் தேவேந்திரனையொத்திருக்கும். நாலு திசையிலும் வேத முழக்கத்தாலும் பூமேலிருத்தலாலும் அன்னப்பறவை யூர்ந்து செல்வதாலும் பிரம்மனைப்போலவும் இராவணன் வலியைத் தொலைத்தலாலும் அராவணையிருத்தலாலும் தேவருலகத்தையுயர்ந்து அளத்தலினாலும் திருமருவுதலாலும் விஷ்ணுவைப் போலவும் தலையிலே சந்திரனும் சலமும் இருத்ததாலும் பாதத்திலே முனிவேங்கை அரவு இருத்தலாலும், வெண்ணிறத்தாலும் மானிட மருவுதலாலும் சிவபிரானைப்போலவும் அம்மலையிலிருக்கும் சரியையாதிகள் செய்யும் புண்ணியர்களன்றி பாவிகளால் அறியப்படாததாகிய அந்தக் கயிலாய மலையின் உச்சியிலே கோவில் ஒன்று இருக்கிறது.

அக்கோவில் சந்திரகாந்த கற்களாலும் நவரத்தினங்களாலும் பொன்னினாலும் தேவ தச்சனால் செய்யப்பட்டது அதிலே ஆனந்த நர்த்தனஞ்செய்து தேவர் முனிவர்களுக்கு கருணைசெய்து அனுப்பிவிட்டு சிவபிரான் உமாதேவியாருடன் எழுந்தருளி இருக்கும்போது மயிடாசுரசங்காரர் தேவியானவள் கன்னிப்பருவமடைந்து புட்பகாசி என்னும் நாமம் உமாதேவியால்பெற்று சிவபெருமானை யருச்சித்து பூசை புரிய தொடங்கி ஆனந்தக்கண்ணீர் திருமஞ்சனமாகவும் புன்சிரிப்பே புட்பமாகவும் சுவாசமே வாசனைத்

திரவியமாகவும் சரீரத்திலுண்டாகிய வாசனையை நல்ல தூபமாகவும் நாக்கிலுண்டாகிய வசனமே நைவேத்திய மாகவும் நேத்திரப்பார்வையை தீபமாகவும் கன்னத்திலே அடிப்பதை வாத்திய ஓசையாகவுமமைத்துச் சத்தியோ சாதன முகத்தில் வாசனைத்திரவியமும் ஈசான முகத்திலே மலரும் தற்புருட முகத்திலே தூபமும் அகோர முகத்திலே தீபமும் வாமதேவ முகத்திலே நைவேத்தியமும் சேர்த்து பூசைசெய்தனள். இவ்வாறு மூன்று யுகம் பூசைபுரிவதைக் கண்டு திருவுளம் இரங்கி சிவபிரான் மகிழ்ந்து புட்ப காசியாகிய கன்னியை நோக்கி உனக்கு வேண்டிய வரங் கொள்க என்றருளிச்செய்தலும் அவள் சருவ சங்கார காலத்தில் உம்மோடு கிரீடைசெய்து மகிழ்ந்து இருக்க வேண்டுமென்று பிராத்தித்தனள். சிவபிரான் அவளை நோக்கி அருளிச்செய்வார். முந்நூற்று அறுபத்தைந்து நாளும் பதினைந்து கலையும் முப்பத்திமூன்று விகலையும் பதினைந்து தற்பரையும் சேர ஒருவருடமாம், அவ்வருடம் நான்குலெக்ஷத்து முப்பத்திராயிரம் சேர கலியுகம் முடிவாகும். அக்கலியுகம் மிரட்டித்தால் துவாபரயுகமாகும். அது ரட்டித்தால் திரேதயுகமாகும், அது ரட்டித்தால், கிரேதயுகமாகும், அது ரட்டித்தால், ஒரு சதுர்யுகமாகும் அந்த சதுர்யுகம் இரண்டாயிரமானல் பிரம்மாவுக்கு ஒரு தினம் ஆகும், அத்தினம் முப்பது ஒரு மாதம். அம் மாதம் பன்னிரண்டு ஒரு வயது. அவ்வயது நூருனல் பிரம்ம பிரளயமுண்டாகும், அப்பிரளயம் பத்து நடந்தால் விஷ்ணுவுக்கு ஒரு நாழிகை அவ்விஷ்ணு பன்னிரண்டுபேர் இறந்தால் உருத்திரனுக்கு ஒருக்ஷணகாலமாம். அப்போது சருவசங்கார காலம் உண்டாகும். அந்தக்காலம் உன்னேடு

கிரீடைசெய்து மகிழ்ந்திருப்போம். அதுவரை தென் சமுத்திரக்கரையிலே சப்த மாதர்கள் தோழிகளாயிருக்க இலுப்பைப்பூ மாலை தாங்கி இடக்கையை துடையிலே வைத்துக்கொண்டு தவஞ்செய்து பின்னர் வாணுசுரனை வதைத்து பூமிக்கு துன்பத்தை போக்கி இருக்கவேண்டும். நீ இருக்கும் இடம் கன்னிகா க்ஷேத்திரமெனவுந் தவத் தலமெனவுஞ் சொல்லுவார் ஞானவனமெனச் சொல்லும் அத்தலத்திலே நாமும் பிரம்மச்சாரியாய் வந்திருப்போம் என்று விடைகொடுத்தருளினர்.

அவ்விடைபெற்று சிவபிரானை வணங்கி மீண்டும் சப்த கன்னியருடனே புட்பகாசி பொதியமலையைச் சார்ந்து அகத்தியமா முனிவர் செய்யுமுபசார மரியாதை பூசனைகளை யுவந்து மீண்டுவந்து இலங்கையிலே தாவுதற்காக அனு மார் நின்ற மகேந்திர மலையைக்கண்டு வந்து அங்குள்ள சகல வளங்களையும் பார்த்து தென்குமரித்தலத்தை கண்டது போல வியந்து மீண்டு தென் சமுத்திரக்கரை வந்துசேர்ந்து பவளம் முத்து சங்கு செம்பொன் இவைகளை அலைகள் கரையிலொதுக்குதல் சமுத்திரம் தன்னைக் காண கொண்டு வந்த காட்சிபொருள்போலத் தோன்றும் துறைகளையும் இஃதன்றியும் கப்பல்களினின்றும் வந்திறங்கிய யானை குதிரை முதலிய பலவிதப் பொருள்களையும், சமுத் திரத்திலேயுள்ள வாளைமீன்கள் வாள்போல வானிலே நக்ஷத்திரங்களை தாவி மோதி வருதலையும், மகரமீன்கள் ஆகாயத்திலுள்ள மகரராசியைச் சென்று தாக்க அது பயப்படுதலையும் ஆனையை விழுங்குந் திமிங்கல மீன்கள் ஒன்றோடொன்று போர்செய்து சமுத்திரத்தை கலக்கு வதையும், அம்மீன் செய்யுஞ் சண்டையைக் கண்டு திமிங்

கலம் என்னும் மீன் அம்மீன்களை விழுங்கி போவதையும், சமுத்திரத்திற்கு மரக்கலங்கள் கொடிகட்டி இருப்பதாலும் பெரிய வடம் பூட்டியிருப்பதாலும் ஆழி தாங்குதலாலும் துகிற்கொடிகளாலும் இரத்தினங்களாலும் ரதம்போலத் தோன்றுவதையும், புன்னை மலர், தாழ மலர், குமுகம்பூ, சண்புகப்பூ, வாசனை செய்யும் பற்பல சோலை வளங்களையும் பார்த்துப் பார்த்து சந்தோஷித்து இந்த குமரித் தலத்துக்கு தேவலோகமும் நிகரிராது, இதுவே புண்ணிய நகரம் என்று நினைத்து சிவபிரான் கட்டளையிட்டருளிய படியே பூமாலையொருகையிலே புனைந்து ஒரு கையைத் துடையிலே வைத்து புட்பகாசிப் பெயர்பெற்ற சத்தி கன்னிநாயகி என்று சொல்ல தவஞ் செய்துகொண்டிருந்தனள். இந்த சரித்திரம் காந்தத்தில் உவரிபாகத்தில் தானவைபோக காண்டத்திலுள்ளது.

---

அத்தியாயம். III.

# கன்னிநாயகி பூஞ்சோலை புகுதல்.

---

மேகங்கள் ஆகாயத்தைமூட, நக்ஷத்திரங்கள் மறையவும், சந்திரன் வெண்ணிறம் படைக்கவும், கொன்றை, முல்லை மரம் தரைப்பரப்பெல்லாம் பச்சை நிறமடையவும், மின்னல் பிரகாசிக்க இடி முழங்கவந்த கார்காலம் நீங்கியவுடனே வாடை வருந்தோறும் பிரிந்திருந்த ஸ்திரீ புருஷர்களை துன்பஞ்செய்யும் கார்காலம் வந்தது. அதன்மேல்

தாமரையுங் குவியும் பனிக்கூட்டம் வெண்போர்வை போர்த்தால் போல பூமியெங்கும்மூட மாதரும் ஆடவரும் பிரியாதிருக்கும் முன்பனி பின்பனி யென்னுமிரண்டு காலமும் வந்து நீங்கியன. ஆம்பலல்லி நீலோர்பலங் குவிய தாமரை விரியச் சூரியகிரணம் சோலைகளெல்லாஞ் செந்தளிரீன்று மலர்ந்து பிகந்த வாசனைவீச அவ்வாசனையைத் தென்றல் காற்றெங்குங் கொண்டுபோய் பரப்ப நாயகரும் நாயகிகளும் தடாகத்திலும் சோலையிலும் போயிருக்கும்படி இளவேனிற்காலம வந்தது தேவர்களுக்கு அபயமருளிய கன்னிநாயகி சத்த கன்னியரை நோக்கி, பூஞ்சோலைக்குட் சென்றிருப்போமென்று கட்டளையிடவும், அம்மாதர் கன்னி நாயகியை அலங்காரஞ்செய்யத் தொடங்கினர்.

கூந்தலைச் சிவந்தரேகை விளங்கும்படி நடுவேவகுந்து சூரியப்பிறை சந்திரப்பிறை யணிந்து தலையிலே கிரீடமும் பொன்னரி மாலைகளும் பூமாலைகளுமணிந்து இளஞ் சந்திரனைப் பிளந்துவைத்தாற்போன்ற நெற்றியிலே சிந்தூரப் பொட்டிட்டு, சூரிய சந்திரர்களென்னுந் தோடுங்காதுகளிலே புனைந்து மானைக்காட்டிலுந் தாமரை குவளை மீனிவைகளை ஜலத்திலும் புதத்தி வேல், வாள், அம்பு இவைகளை யுறைகளுள்ளொழிப்பச்செய்து கடலை பயங்கொண்டலையச் செய்யும் கண்களுக்கு மையெழுதிக் குமிழம் பூவையும், எட்பூவையும் பழித்து விளங்கும் நாசியில் அம்மலர்களென்று வண்டுகள் வீழ்ந்து மிதியாமல் சண்பக மலரின் வாசனைபோலச் சுவாசம் வெளிவரவும் சர்வலோக மிக நாயகராகிய சிவபிரான் திருமேனியினழகைப் பார்க்கும் கண்ணாடிபோலும் கன்னங்கள் கண்ணுகிய வேல்கள் தீட்டுதற்கு வைத்த சாணைக்கல்போல விளங்கவும் முருங்கம்பூ

முதலியவுமான பொருள்களை நிந்தித்து அமுதத்தை யடைத்துவைத்துத் தன்மைபோல விளங்கும் செவ்வா யிதழும் முல்லைமலர் முதலியவற்றைச் சிரித்து பிரகாசிக்கும் பற்களும் சந்திரனைக்கண்டு குவியாத தாமரைபோலும் மலர்ந்த முகமும் பார்த்து, அதன்மேல் சங்கங்களை அயலச் செய்யும் கழுத்திலே பிரகாசிக்கும்படி அணியப்பட்ட ஆபரணங்களை அணிந்து கரும்பு முதலியவற்றை வென்ற தோள்களிலே தொய்யிலெழுதிக் காந்தண் மலர்போலுங் கைகளிலே கடகமும் வளையலும் புனைந்து ஈர்க்கு நடுவே புகாமல் நெருங்கித் தேமல் படர்ந்து இளநீரழகைக் கெடுத்து கச்சுக்கட ங்காமலோங்கிக் கலவைச் சந்தணம் பூசப் பெறும் முலைகள் சொர்ணக்குடம்போல் விளங்கவும் ஆலிலை போலும் வயிற்றிலெழுந்த உரோம ஒழுங்கு விஷ்ணுவைப் போலவும், கொங்கையாகிய யானைகள் கட்டுஞ் சங்கிலி போலவும், மேகலாபரணத்தின் நீலவொளி மேலெழுந்தது போலவும் பிரகாசிக்கும் அழகும், நீர்ச்சுழி போலுங் கொப் பூழும், உடுக்கு முதலியவைபோலக் கொங்கை பாரத்தாற் றேய்ந்திளைத்த மெல்லிய இடையும், தேர்த்தட்டு முதலிய வுமானப் பொருள்களைப்போல வனப்புவாய்ந்த அல்குலும், விரிந்த இலைகளையுடைய வாழையினையும், யானைத் துதிக் கையினையும் வென்ற தொடைகளும், சோலைகளிலே பழத் தையும் பூவையும் உண்ணும் குரங்குகளும், மயக்கங் கொள்ளும் முழங்கால்களும், வாணாசுரனுயிரை யுண்ணும் அம்பறாத்துணிபோன்று வரால் மீனை யொழிக்கச்செய்யும் கணைக்கால்களுங் கண்களினழகை நிறுக்குந் தராசுதட்டு போலும் குதிக்காலும் புத்சகம்போலும் புறவடிகளும், சந்தானைப் பவளத்துண்டத்திற் பதித்தாற்போலும், நகங்

களும் விரல்களும் அடியார்களுக்கு முத்திரையைக் கொடுக்கும் தாமரை மலர்போலுந் திருவடிகளும், விளங்கித் தோன்ற அத்திருவடிகளிலே சிலம்பும், நூபுரமும் புனைந்து மின்னலைப்போலுந் திருமேனி பிரகாசிக்கவும், கரங்களிலே பூமாலையொன்றைக் கொடுத்தனர்.

அம்மாலையை வாங்கிக்கொண்டு கன்னிநாயகி சப்த மாதர் தன்னைச் சூழ்ந்து வீணையினிசை பாடக்கேட்டு வண்டுகளிசை பாடுகின்ற பூஞ்சோலைக்குள்ளே சென்றனள் மேகங்கள் படிதலால் இருணிறைந்த தருக்கள் கன்னி நாயகியாகிய பகவதியம்மை திருமேனிடி விளக்குமொழி வீசுதலாலே இருள்கெடக் கற்பக விருக்ஷங்கள்போலப் பொன்னிறம் படைத்தன சப்தமாதரின் இசைகேட்டுப் பட்ட மரங்கள் தளிர்த்துப் பூத்துத் தேன்மலரைச் சொரிந்தன அம்மை வருகிறுளென்று சோலைகள் பரப்பிய அனிச்ச பூக்கள் மன்மதன் தூவிய மலர்கள்போலிருந்தன. அன்றியும் பல மலர்கள் நிலத்திலுதிர்ந்தும் மாதுளம் பழங்கள் கொம்பினிறைந்துமிருத்தல் சோலையாகிய பெண் அம்மையை உபசரிப்பதற்கு வைத்த காக்ஷிப் பொருள்கள் போலிருந்தன. எலுமிச்சம்பழங்களும் கழர்ச்சிக் காய்களும் சோலையில் கன்னிநாயகி விளையாடுவதற்கு வைத்த அம்மானையும் கழங்குபோலிருந்தன.

சோலையாகிய மடந்தை கொன்றைக்காயாகிய கூந்தலும் கொடியாகிய புருவமும், வண்டாகிய கண்ணும், குமிழம் பூவாகிய மூக்கும், முருக்கமலராகிய இதழும், முல்லையரும் பாகிய பற்களும், கமுகாகிய கழுத்தும், கரும்பாகிய தோளும், கோங்கரும்பு இளநீராகிய முலைகளும், காந்தா

ளாகிய கைகளும், ஆலிலையாகிய வயிறும், வாழையாகிய தொடையும், மயிலாகிய சாயலுங் கொண்டுவந்து கன்னி நாயகியை இளநீராலபிடேகமும் ஆகாயங் கையாற்றிரு மஞ்சனமும், பூங்கொத்தால் மாலையும், சந்தன மரங்கள் ஊரோஞ்சிதலாலுண்டாகிய சந்தனக் குழம்பும், பழங் களால் நைவேத்தியமும். அசோகம் பூவால் தீபமும், குங் சிலியும் கண்டில் பெண்ணை மரங்களாற் றூபமும், மாம் பூவாற் தீபமும், மேகமுழக்கத்தால் வாத்தியவோசையும், வண்டினோசையாற் பாடலும், மயில் நடனத்தால் நிருத் தனமும் அமைத்து பூசை செய்தனள்.

அந்த பூசையை மகிழ்ந்து கன்னிநாயகி சோலைமாதை நோக்கி உனக்குவேண்டிய வரத்தைக் கேட்கவென்றருழிச் செய்தனள். அவள் வணங்கி தாயெ! நீ எங்களிலுயர்ந்த கற்பகச் சோலைகளெல்லாம் அழித்த பாணுசுரன் தலையை அறுத்தெறிய வேண்டுமென்று விண்ணப்பம் செய்தனள். அவ்வாறே செய்கிறேனென்று சொல்லி கன்னிநாயகி சப்த மாதர் வீணுகானத்தைக்கேட்டு மகிழ்ந்து ஒரு தடாகத்தி னருகே வந்து சோலையின் சிறப்பையெல்லாங் கண்டுகளித் தெழுந்தருளியிருந்தனள்.

---

அத்தியாயம் IV.

# வாணாசுர சங்காரம்.

---

பழமையாகிய மூன்றுலகங்களையும் மடக்கியரசாட்சி செய்துவரும் வன்மையுள்ள வாணாசுரனது வேவுகாரர் துன்முகன் துர்த்தெரிசனனென்னு மிருவர் அளவில்லாத மாயஞ்செய்ய வல்லவர் எவ்விடத்துங் காணப்படும் அதிசயங்களை வர்ணனுக்குத் தெரிந்து சொல்லுங் குணமுடையவர். அவ்விருவரும் பூமாலையைக் கையிலே தாங்கிப் பூஞ் சோலையில் வீற்றிருந்த கன்னிநாயகியை வந்து கண்டு மின்தானோவென்றை யுற்றுப் பெண்ணென்று தெரிந்து இவளை நமது வாணாசுரனடைந்தால் தவப்பயன் பெற்றவனுவன் என்று விரைந்துசென்று தன்னைத்தானே நிகர்த்த வாணனுக்கு முன்னின்று வணங்கி அரசே! ஒருநாளுங் கண்டறியாத அதிசயங் கண்டோம். மின்னென்போமோ? மின்னினொளியென்போமோ? பொன்னென்போமோ? விளக்கென்போமோ? இந்திராணியென்போமோ? இராசாக்களணியுங் கிரீடமென்போமோ? அழகுக்கெல்லாமிருப்பிடமாகிய சொரூபம், இத்தகைய பெண்ணையெல்லாஞ் செல்வமும் சிறப்பும் பெற்றிருக்கின்ற நீ பெற்றாயாகில் உன்னுடைய மாட்சிமை மிகச் சிறப்புற்றோங்கும். பூமாலையேந்திநிற்கும் அந்தப் பெண்ணினுடைய ஊழியக்காரிக்கும் இலக்குமி சமானமாகமாட்டாள். மன்மதனை வென்ற பரமேசுரனும் அவளைக்கண்டால் அம்மன் மதனுணைக்குட்பட்டு

நடப்பான். வீரனே நீ விரைந்து சென்ருலுனக்கே மாலே சூட்டுவாள். அவளே நீ பெற்ருல் எந்த இடத்தில் வைத்துக் கொள்வாயோ என்றனர் வாணன் அதி மோகங்கொண்டு தூதர்களே! அப்பெண் எவ்விடத்திருக்கின்ருளென்று கேட்க தூதர் சொல்லுவார் தென் சமுத்திரக்கரையிலே குமரியென்னுமொரு நகரமுண்டு. அதன் பக்கத்திலே கற்பகப் பூஞ்சோலேபோல ஒரு பூஞ்சோலேயிருக்கிறது. அங்கே ஏழு பெண்கள் சூழவிருக்கின்ருள் என்றனர் உடனே சேனேகள் சூழத் தேர்கொண்டுவரும்படி சொல்லியதிலே ஏறிக் கொண்டு செல்கிருன். இப்படி செல்லும் வாணன், ஆகாயத்தை முட்டிய தலேயும் செவ்வானம் போன்ற தலே ரோமமும் பிறைச் சந்திரன்போன்ற வக்கிர தந்தங்களும், அக்கினி நிற்கும் கண்களும், தீச்செயல்களே செய்யும் வலிமையும், எல்லாவுயிர்களேயும் வாயிலிட்டுண்டு வயிற்றிலடக்குவதும் மகாமேருவை நிகர்த்த புயங்களும், நீண்ட கைகளும், யமன்போல முழங்கும் வீரக் கழல்களும், நீல மலேபோன்ற கருநிறமும், பிரம்மாவினடத்திலே அரிய தவஞ்செய்து பெற்ற வரங்களுமுள்ளவன் தீவினே செலுத்துதலிஞலே விரைந்து கன்னிநாயகி யிருக்கும் பூஞ்சோலேயில வந்துசேர்ந்து அங்குள்ள வளங்களெல்லாம் கண்டு மகிழ்ந்து சப்த கன்னிகைகள் பாடும் பாடலேக்கேட்டு உலே மெழுகுபோல மனமுருகித் தேரையும் சேனேகளேயும் நிறுத்திவிட்டு தனியாய்வந்து கன்னிநாயகியைக் கண்ணுரக் கண்டு காமத்தீயாலுடல் கருகி மனமுருகி வலியிழந்து பெருமூச்செறிந்து இந்த அமுதம்போல் வாளேக் கண்டு வந்துசொன்ன தூதர்களுக்கு பரிசில் கொடுப்பதற்கு என்னிடத்திலே பொருள்கள் இருக்கின்றன. என்னுடைய

செல்வமெலாங் கொடுத்தாலும் போதுமா? என்றதிசயித்து நின்றான்.

என்னுயிர்போல இடை குறைய நின்ற இவள் உருப் பசி முதலிய தெய்வப் பெண்ணுமல்லள் பெறுதற்கரிய பேரின்ப வடிவமேயாகும். அவயவங்களினழகோ சோல்லு தற்கு முடியாது. சோலையிலுள்ள குயில் மயில் வண்டுகள் அன்றில் முழங்கி யென்னுயிரைக் கொல்லுகின்றன. சமுத் திரம் முழங்கி வருந்துகின்றன. கமுகம்பூவும், மகிழம்பூவும், மல்லிகைபூவும், தாழம்பூவும் என்னை யிறந்துபோம்படி செய்கின்றன. சிவனாலும் விஷ்ணுவாலும் போக்குதற்கரிய என்னுயிரை மன்மதபாணம் உண்ணுமறற்போகாது என்று தென்றற்காற்று முதலியவற்றால் வருந்தி கன்னிநாயகிநேரே வந்து சொல்லுவான்.

அன்னமே யமுதே, கிளியே மானே, மயிலே, மின்னே மரகதமணியே, பொன்னே, என்னுயிரையினிக்குங் கனியே இங்குநின்ற காரணமென்ன? அநேக தவஞ்செய்தாலுங் கிடைப்பதற்கரிய உன்னைக் காண்பதற்கு முன்னை நான் என்ன தவஞ்செய்தேனோ! என்னையாழ்வதற்கோ இங்கு வந்து நின்றனை. நீ சொல்லிய ஊழியங்களைச் செய்வேன். அற்பமாகிய தேவர்களைப்போலென்னை நினைக்கவேண்டாம். எல்லாச் செல்வங்களுமுடையேன், யமனும், பயப்படும் வலிமையுள்ளேன். எனக்குப் பயந்தன்றோ சிவனும் விஷ்ணுவும் மலையிலும் கடலிலும் போய் ஒளித்திருக்கிறார்கள். நீ அளியமாட்டாய்போலும் இந்திரன் முதலிய தேவர்க ளெல்லோருமேவல்கேட்ப அரசுபுரிகிறேன்! என் பெயர் வாணாசுரன் காமத்தினாலே யான் வருந்தலாமோ மன்மதன்

செய்யும் வருத்தத்தை நீக்கவேண்டுமென்று அவயவங்களை வருணித்துச் சொல்லி பின்னும் சொல்லுவான் காமவியாதிக்குச்சொல்லப்பட்ட அவத்தைபத்திலுள்ள ஒன்பதவத்தை வந்துபோயின் இனி மரணவத்தை வந்தெய்தும், அதைத் தடுப்பதற்கு யந்திர தந்திரமும் அரசருதவியும் ரதகஜதுரக பதாதிகளும் ஆயுதங்களும் வேண்டுவனவல்ல, உன்னுடைய கிருபா நோக்கஞ் சிறிது செய்தாற்போதும். திரிலோகங்களையாளும் முதன்மையும் உனக்கே கொடுத்து உன் பாதத்தை வணங்கி உன்னுடைய ஏவல்வழி நிற்பேன். வீணாகத் தவஞ்செய்து மேனியெல்லா மிளைத்தனை இதனால் என்ன பிரயோஜனம் எவ்வனப்பருவத்திலன்றோ இன்பத்தை அனுபவிக்கவேண்டும் நீ எந்தப் பொருள்களை கேட்டாலும் கொண்டுவந்து கொடுக்கிறேன் என்றனன்.

இப்படிச்சொல்லிய பாதகனாகிய வாணனைப் பார்த்து கன்னிநாயகி கூறுவாள். பின் வருவதறியாத தூண்டின் மீன் முதலியவற்றைப்போல கெட்டுப்போவதற்கிருக்கின்ற வாணனே! பெண்கள் கருத்தறியாமல் ஆசை கொள்வது முறையன்று, அவரை தொட நினைத்த தீயவருக்கு ஆயுள் குறையும். மறுமைப் பயனுமில்லை என்றனள். இவள் நம்மைக் கொல்லவந்த கூற்றுவன் என்றறியாத கொடியவனாகிய வாணன் பெருமூச்செறிந்து பெண்ணே! உன்னை விவாகஞ்செய்யும்வரை என்னுயிர் தரியாது காந்தரூபமுறையாக யான் முதலிலே மணந்து பின்னர் விதிப்படி விவாகஞ் செய்துகொள்கின்றேன் என்றனன். அதுகேட்டு கன்னிநாயகி வாணனே! உனக்கு வேண்டியவையெல்லாம் கொண்டுவந்து தருவேனென்று முன்னமே சொன்னாய் ஆதலால் பாதிரி பழமும், அருகம் பழமும், ஆலம்பூவும்,

அத்திப்பூவும், இத்திபூவும், சந்திர நக்ஷத்திரங்களிலுள்ள பிரகாசங்களையும் கொண்டுவந்து கொடுத்தால் நீ சொன்ன காரியம் முடியும் என்றனள். வாணன் அவையனைத்தையும் மாயையினுலே செய்து கொண்டுவந்து வைத்தனன். கன்னி நாயகி பார்க்குமுன்னமே எல்லாப் பொருளும் மறைந் தோடிப்போயின. மாயைக்கெல்லாந் தாயாகிய கன்னிநாயகி முன்பு அவை நிற்குமோ. வாணன் தன்னுடைய மாயை பொய்த்துப் போனதறிந்து வெய்த்துப் புழுங்கி வருந்தி நின்று இவளைப் பயப்படுத்தினுலன்றி இணங்கமாட்டாள் என்று நினைத்து வாளாயுதத்தை எடுத்து உன்னைக்கொல்லு வேன் என்றுரவாரித்து வந்தனன்.

அதுகண்ட கன்னிநாயகியும் வாளாயுதமேந்தி யுத்தத் துக்கு வந்து நின்றனன், அவளை வாணன் வாளையசைத்து வெட்டினுன். அந்த வெட்டு நாயகிமேலே தாக்காமல் விலக நாயகி யவன் வாளைத் தன் கைவாளாலே யொரே வெட்டி னுலே துண்டித்து வெட்டினள், வாணன் வில்லை வளைத்துப் பற்பல பாணங்களை பிரயோகஞ் செய்தனன். அவைகளையும் நாயகி வாளால் வெட்டித்தள்ளினள், பின்னும் வாணன் எட்டுத் திக்கும் வெளியில்லாமல் மூடும்படி பாண வருஷங் களைப் பொழிதல்கண்டு அவற்றைக் கன்னிநாயகி வில்லை வளைத்து அசுரர் பயப்படும்படி குணத்தொனி செய்து தீப்பொறி பறக்கப் பாணப பிரயோகஞ் செய்து பொடி பொடியாகச் சிதறிவிட்டனள். அசுரர்சேனை கடல்வளைந்து பாணம் வேல்குந்த முதலிய படைகளைத் தேவி மேலேறிப் போர்க்கு வாவென்று புயங்களைத் தட்டி நிற்றலும், தேவி ஒவ்வொரு பாணங்களால் நால்வகைச் சேனையும் தொலைத்து வெற்றி சங்கு முழக்கி நின்றனள். அதுகண்ட வாணன்

தேர்மேலேறி நெருங்கிவந்து தேவிமீது தேவாஸ்திரங்களைத் தூவி நின்றனன். அவைகளையும் வாணனுடைய வில் அம்பறுத்துனி தேர் சாரதி தேர் குதிரையனைத்தையும் அக்கினி பாணத்திலே தரையிலே வீழ்த்திவிட்டனள். வாணன் பயந்து மாயையாலே மறைந்து போக நினைத்தனன், அது தெரிந்து சக்கிராயுதத்தை வரும்படி நினைத்ததும் அது சூரியனைப்போல் பிரகாசித்துவந்து வாணனுடைய தலையை அறுத்து சமுத்திரத்திலே எறிந்துவிட்டுத் தேவி பாதத்தை வணங்கி பூமியைக் கிழித்துக்கொண்டு பாதாளம் போய்ச் சேர்ந்தது. கிழித்துக்கொண்டு போன இடத்திலே ஒரு தீர்த்தமுண்டாயிற்று. அதுதான் சக்கரத் தீரத்தமென்று சொல்லப்படுவது. வாணனது அறுபட்ட தலை சமுத்திர ஜலமுழுவதையுமுண்டுவிட்டது. வாணன் சேனையிலிறந்தவருடைய ரத்தம் போய்பெருகி அந்த கருங்கடலைச் சென்னிறக் கடலாக்கிவிட்டது. உடனே தேவர் முனிவர் முதலியோர் ஆடிப்பாடி பற்பல ஆசிகூறி புஷ்பமாரி பொழிந்தனராய்த் தேவியை நோக்கி தாயே! திரிமூர்த்திகளாலு முடிக்கற்கரியதாகிய செய்கையை நீ வந்து செய்து எங்களை இரக்ஷித்தாய் என்று பலவாறு தோத்தரித்து நிற்க அவரைத் தேவி கிருபைக் கண்ணாரப் பார்த்து நீங்கள் அவரவர் வதவியிலேபோய் சுகமாக வசித்திருங்களென்று அவர்கள் கேட்ட வரங்களையேல்லாம் கொடுத்தருளி தன்றுணைவியாகிய சப்த மாதர்களுடன் வந்து பூமாலையைக் கையிலே முன்போலத் தாங்கி தவஞ்செய்வார் போலக் குமரித்தலத்தில் வீற்றிருந்தனள்.

---

அத்தியாயம். V.

# கன்னியாகுமரி தீர்த்தச் சுருக்கம்.

---

எவ்விடத்திலுமுள்ள தீர்த்தங்களுக்கு மேலாகிய கன்னியாகுமரித் தலத்தில் தேவி சன்னதிமுன்னும் அதன் வடக்குந் தெற்குமுள்ள தீர்த்தங்கள் தம்மிடத்தில் முழுகினோர் நினைத்தவைகளைக் கொடுத்தருளும். சர்க்கர சீர்த்தம் பாவநாசம் காவித்திரி, சாவித்திரி, சரசோதி, கன்னியாகுமரி கணேச தீர்த்தம், தாணு தீர்ததம், வீம தீர்த்தம், பிதிர் தீரத்தம், மாதரு தீர்த்தம், ஆகிய பதினொரு தீர்த்தங்கள் சமுத்திரக்கரைக் கண்ணேயுள்ளனவாம். கன்னி நாயகி வாணசுரனைக் கொன்ற காலத்திலே தேவர், முனிவர், சித்தர், மருத்துவர், வசுக்கர், சப்த மாதர்கள், விசுவ தேவர், பிதிர்கள், எல்லோரும் தேவியைத் தோத்திரம் செய்ய உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்கள் என்று தேவி யருளுதலும், தாயே நீ இந்த கன்னியாகுமரித் தலத்திலிருந்து அடியார்க் கருள்செய்யவேண்டும், அன்றியும் எங்களுடைய பேராலே இந்தத் தலத்திலே தீர்த்தங்களுண்டாகவேண்டும். தேவர் முதலானோர் கேட்கத் தேவி அவ்வாறு வரம் தந்து பிதிர்க்களை நோக்கி உங்கள் தீர்த்தத்திலே யாவராயினும் மூழ்கித் தானம் கொடுத்துப் பிண்டமிட்டுத் தர்பணம் சிராத்தம் செய்

வாரனுலும் தங்கள் பிதிர்களை யுத்தேசித்து ஏழுதர மூழ்கினுலும், அவர் குலத்திலுள்ளோர் எல்லோரும் சொற்க பதவியில் சென்று கற்பகாலமிருப்பர், பிதிர் தினத்தில் மாதந்தோறும் ஒருவருடம் மூழ்கினவர் மோக்ஷ உலகமடைந்திருப்பர் என்று பெரிய வரமும் கொடுத்தருளினர். இம்மட்டோ? பிதிர் சாபமும் வேறு சாபமும் பாவங்களும் அத்தீர்த்தத்திலே மூழ்கினேர்க்கு நீங்கும் இட்ட சித்தியெய்தும் தமது குலம் விருத்தியடையும். பாவிகளந்த தீர்த்தத்தையடையமாட்டார்கள். புண்ணியர்களேயடைவார்கள்.

பிரமாணி, மயேசுரி, கவுமாரி, வீரி வராகி, இந்திராணி, சாமுண்டியாகிய சப்தமாதருந் தங்கள் தங்கள் பெயராலே பிதிர் தீர்த்தத்தின் பக்கமே தீர்த்தங்கள் செய்து அதிலே மூழ்கினவன் பாவியானுலும், பாவந்தீர்ந்து மோக்ஷமடைவன். மனத்திலே நினைத்தவையெல்லாம் பெறுவானென்று வரங்கொடுத்தனர். ஆதலாலே எல்லோரும் அந்தத் தீர்த்தத்திலே தீர்த்தமாடவேண்டும். சமுத்திரக் கரையிலேயுள்ள பாவநாசமென்னுந் தீர்த்தம் உலகமெல்லாம் புகழப்பட்டது இந்திரன் கௌதம முனிவரிட்ட சாபந்தீர்க்கும் பொருட்டுக் கன்னியாகுமரித் தலத்திலே தேவியை நோக்கி வந்து வட பக்கத்திலேயுள்ள ஒரு தீர்த்தத்திலே தினந்தோறுந் திரிகாலமுந் தீர்த்தமாடிப் பக்தி செய்து தேவியைப் பூசித்துத் தவஞ் செய்திருந்தனன். கன்னி நாயகி இந்திரன் முன்னெழுந்தருளி இந்திரனே உன்னுடைய தவத்தையும் பூசனையையும் மகிழ்ந்தேன்! உனக்கு வேண்டிய வரங்களைக் கேட்க என்றனர். எல்லா உலகமும் வேதங்களுந் துதிக்கும் தேவநாயகியே! உன்னை தரிசிக்கப்பெற்ற

பேற்றைப் பார்க்கிலும் அடியேன் பெறுவது யாதிருக்கின்றது என்று இந்திரன் தேவியைத் தோத்திரஞ் செய்து கௌதம முனிவர் கொடுத்த சாபத்தை நீக்கியருள வேண்டும் எனப் பிரார்த்தித்தனன். அவனை நோக்கி தேவி திருவருள் சுரந்து முனிவன் சாபத்தா லுண்டாகிய குறிகளெல்லாம் கண்களாகும்படி வரம் தந்தேன். சுகமாக வாழ்வாய். உன்னுடைய பாவமெல்லாம் தீர்த்தம் போக்கியபடியால் இது பாவநாசமெனப் பெயர் பெறக்கடவது. இதில் கொடிய பாவிகள் மூழ்கவேண்டுமென்பது நினைத்தாலும் பாவங்களெல்லாம் நீங்கிப் பரிசுத்தராகிச் சொர்க்க பதவியடைவர்.

இனி சாவித்திரி, காயத்திரி, சரஸ்வதி என்னும் மூன்று தீர்த்தங்களில் மான்மியம் என்னவென்றால் கங்கை, யமுனை, சரஸ்வதி என்னும் நதிகள் மூன்றிலும் உலகத்தாரனைவரும் வந்து, வந்து மூழ்கிப் பாவங்களை விடுத்தலால் அந்த நதிகள் குற்றமெய்தி இந்தப் பாவத்தை எங்கு போய்த் தொலைப்போமென்று ஆலோசித்து கன்னி நாயகி வீற்றிருக்கும் குமரித் தலத்தில் வந்து கங்கை சாவித்திரியாகவும், யமுனை காயத்திரியாகவும், சரஸ்வதி சரஸ்வதியாகவும் நாமங்கொண்டு கன்னி தீர்த்தத்தின் வடதிசையிலே தீர்த்தவடிவமாகி ஆயிர வருடந் தவஞ் செய்திருந்தலும், அது கண்டு கன்னி நாயகி திருவருள் சுரந்து தீர்த்தங்களின் முன்னெழுந்து நின்று உங்களுக்கு வேண்டும் வரம் கேட்க என்றருளிச்செய்தனள். உடனே அத்தீர்த்தங்கள் வணங்கி இவ்வுலகத்தாரெல்லோரும் வந்து மூழ்கலால் அவர்கள் பாவமெல்லாமடையப் பெற்றனம்; அவைகள் நீங்கும்பொருட்டுக் கருணை செய்யவேண்டுமென்

றன. தேவி அந்தப்படியே திருவருள் புரிந்து நீங்கள் உங்கள் பெயராலே செய்த தீர்த்தங்களிலே எப்போது மிருத்தல் வேண்டும் அத்தீர்த்தங்களிலே வந்து மூழ்கினுல் பாவம் முழுவதும் நீங்கிப் பரிசுத்தராகி நினைத்த காரியங்களெல்லாமடையும் வரம் தந்தேன் என்று சொல்லித் தன் இருப்பிடத்திற்குச் சென்றனள்.

இனி வீம தீர்த்தத்தின் மான்மியமாவது: குருகுலத் தரசனுகிய திரியோதனுதியருந் தருமனுதியரும் சகுனி என்பவன் வஞ்சனையாற் சூதாடல் செய்து நாட்டை இழந்து தருமனுதியங் காட்டுக்குப் போய் வாசம் செய்திருக்கும் போது தருமராசனை நோக்கி வீமன் சூதாடிய உன், கை நெருப்புப் பற்ருதோ? என்று நிந்தனை செய்தனன். அதனுல் தரித்திரமடைந்து மதிமயங்கி யாதொரு செயலுமற்றுத் துன்புற்று வீமனிருப்பதைத் தருமராஜனறிந்து தனது பழைய ஆச்சாரியரான தவுமிய முனிவரை அழைத்து வீமனுற்ற துன்பத்தைச் சொல்லியது தீருவதற்குப் பிராச்சித்தம் யாது என்று கேட்டு அவரது ஆக்ஞையின்படி கன்னியாகுமரியின்கண் வந்து தேவி தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து தம்பியாகிய வீமனையும் ஸ்நானஞ் செய்வித்த உடனே வீமன் சகல பாவமும் தீர்ந்து முன்போல அறிவுடையவனுயினன். பின்னிருவருந் தேவி திருவடித் தாமரையை வணங்கித் திருவருள் பெற்று மகிழ்ச்சியடைந்து வந்த வனவாசம் நீங்கிச் சென்றனர். அன்று தொட்டுத் தேவி தீர்த்தம், வீம தீர்த்தம், என்னும் பெயரைப் பெற்றது.

இனி கன்னி தீர்த்த மான்மியம் என்னவெனில் அந்த தீர்த்தம் தேவி சன்னிதியிலுள்ளது. எல்லாத் தீர்த்த

மேன்மையினும், அதிக மேன்மையுடையது. திரிலோகத்திலுமுள்ள தீர்த்தங்களெல்லாமித் தீர்த்தத்திலே வந்திருக்கும் புத்திரனைப், பூமியைப், பொருளைக், கல்வியை, மோக்ஷத்தை இன்னும் விரும்பியவற்றை இந்த தீர்த்தம் தன்னிடத்தில் வந்து மூழ்கினோர்க்குக் கொடுத்தருளும் எல்லாத் தீர்த்ததிதினு முயர்ந்த கங்கை முதலிய மூன்று தீர்த்தங்களுமித் தீர்த்தத்திலோடு மென்று விதுபோலச் சிறந்த தீர்த்தமில்லை யென்று சொல்லவும் வேண்டுமோ! அறிந்து மறியாமலுஞ் செய்த பாவங்கள் எவ்வளவானுலு மிதிலே மூழ்குவார்க்குச் சூரியன் முன்னே தீர்ந்த பனி போல் நீங்கிவிடும். வேதங்களாலுஞ் சொல்லுவதற்கரிய இந்த தீர்த்த மான்மியமெடுத்துச் சொல்ல வல்லவர் யாவர். இனி தாணு தீர்த்த மான்மியம் யாதெனில் கந்தபுராணத்திற் சொல்லப்பட்ட சுசீந்திர மென்னும் சேத்திரத்திலே தாணு நாயகர் திருமுடியிலே யபிடேகஞ் செய்வித்த பற்பல அபிடேக தீர்த்தம் தாணு நாயகர் சடையிலுள்ள கங்கா நதியுடன் சேர்ந்தே ஒன்றுகி கீழே வந்து பாதலவாகினியாய் சென்று கன்னியாகுமரித் தலத்திலுள்ள வீமதீர்த்த துறைக்கு மேல் பக்கமுள்ள கடலுள்ளிருக்கும் சக்கர மலையின் பக்கமே சேரும். அதிலே கன்னி நாயகித் தீர்த்தமாடுவாளென்றுலதின் பெருமை சொல்லமுடியுமோ? சென்ற பிறப்பிலு மிறப்பிலுஞ் செய்த பாவங்களை போக்கி மோக்ஷமடைய விரும்பி தவஞ்செய்பவர் இந்த தீர்த்தத்திலே மூழ்குவர். முனிவர்களெப்போதுமிதிலே ஸ்நானஞ் செய்பவர். இகபர லாபமடைய விரும்பினவருக்கு இத்தீர்த்தமே சாதனமாயுள்ளது. அகத்தியர் முதலிய ரிஷிகளும் இதிலே தோய்வாரென்றுல் இதின் பெருமை யாராலே சோல்ல முடியும்.

இனி கணேச தீர்தத மான்மியம் என்னவெனில் விஷ்ணு அம்சமாகிய பாசுராமன் சத்திரியனே வரையும் வென்று யாகஞ்செய்து இந்தப் பூமியைத் தானங்கொடுத்தனன். பின்னர் தானங் கொடுத்த பூமியிலே தானிருக்கலாகாது என்று வருணனை நோக்கி தவஞ் செய்து உனக்குரிமை யாகிய கடலிடத்திலே என் மழுவாயுதத்தை எறிவேன். அது வீழ்ந்த இடத்துக்கப்புறம் கடல் நீர் போய்விடவேண் டும். நீர் வற்றிய இடத்தை எனக்கு கொடுக்கவேண்டு மென்று வரம் பெற்று அவ்வாறே செய்து ஒரு யோசனை தூரமுள்ள இடத்தை கைக்கொண்டனன். அதன் மேற் கன்னியாகுமரி கடற்கரையிலே விநாயகரை பிரதிஷ்டை செய்து பூஜித்து சுவாமி! இந்த கடற்கரையைக் கடவா திருக்க வேண்டும். தேவரீரிங்கெப்போது மெழுந்தருளி யிருந்து உம்முடைய சன்னதிக்கு நேரே சமுத்திரத்திலே மூழ்கினோர்க்கு இட்ட சித்திகளையருளி முக்தியுங் கொடுத் தருளல் வேண்டுமென்று வரம் பெற்றனன். சந்நிதி முன் னுள்ள கடலே கணேச தீர்த்தமாம் அதிலே எல்லோரும் தீர்த்தமாடி விநாயகருக்கு பழம் முதலாகிய சிற்றுண்டிகள் படைத்து ஆராதனை செய்வர், மான்மியஞ் சொல்ல முடியாது.

இனி சக்கிர தீர்த்த மான்மியமாவது கன்னி நாயகி வாணாசுரனது தலையை அறுக்கப் பிலத்தின்று வர வழைத்த சக்கிராயுதம் வந்த இடத்தைச் சக்கர தீர்த்த மாகச்செய்தனள். இதிலே வந்து மூழ்குந் தேவரையும் மனிதரையும் அளக்க முடியாது. இவ்விரு நிறத்தாரையும் வணங்கினோருஞ் சுவர்க்க பதவி அடைவரென்றால் அதன் பெருமை சொல்லுந்தரமுடையதோ.

சக்கிர தீர்த்தமாடவேண்டில் அத்தீர்த்தங் கண்ணுக்குத் தெரியாத தூரத்திலே சென்று மலமோசனஞ் செய்வித்துச் சுத்திசெய்து வந்து தீர்த்தத்தை வணங்கி உள்ளே புகுந்து எச்சிலுமியாது ஸ்நானஞ் செய்து வஸ்திரத்தை வெளியேறி வந்து பிழிந்து தோய்த் துலர்ந்த வஸ்திரத்தா லீரம் புலர்த்திக் காய்ந்த இரண்டு வஸ்த்திரம் தரித்து நித்ய கற்ம முடித்துக் குமரக் கடவுளைத் தரிசிக்கவேண்டும். அப்பாற் பாவாரசத் தீர்த்தத்திலே மூழ்கிச் சமுத்திர ஸ்நானஞ் செய்யப் போகும்போது சாவித்திரி முதலிய மூன்று தீர்த்தத்திலும் மூழ்கி அதன் மேல் வேதியராலே தரிப்பித்து பவித்திரத்தோடு சங்கற்பஞ்செய்து வேண்டியவைகளை மனத்திலே நினைத்து அன்போடு விதிப்படி வணங்கி சமுத்திர ஸ்நானம் செய்து மீண்டும் மேற்சொன்ன மூன்று தீரத்தங்களிலும் மூழ்குதல் வேண்டும். அப்பாற் சங்கற்பஞ் செய்து தேவியைத் தரிசித்து விதிப்படி சன்னதியிலுள்ள தேவி தீர்த்த்மாடவேண்டும். விநாயக தீர்த்தமாடுவோர் விநாயகரை முன்னர் வணங்கிப் பக்தியுடனே தியானித்து இடையூறு வாராமற் காத்தருளுக, அடியேன் பிழைத்தல் வேண்டும் எனப் பிரார்த்தித்து சமுத்திர ஸ்நானஞ் செய்யவேண்டும். தாணு தீர்த்தமாகிய கடலைச் சார்ந்து கும்பிட்டுத் தாணுவாகிய சிவபிரானை நினைத்து வேண்டியவற்றை யருளுக என்று மூழ்கல் வேண்டும். வீம தீர்த்தம், பிதீர்த்தம், மாதா தீர்தகமாகிய மூன்றிலும் இந்த விதிப்படி மூழ்கல வேண்டும்.

அதன் மேல் கருப்பணம், பிண்டம் சிராத்த முதலியவை செய்து முடிவிலே தேவி பர்த தாமரையை வணங்கினர். பாவங்களைப் போக்கிப் பரிசுத்தராவர் சக்கரகிரி

யிடத்து வருந் தாணு தீர்த்தத்திலே மூழ்கினவர் சுசீந்தரத்துக்குப் போய் மும்மூர்த்திகளு மொன்ருகிய தாணுமாலயனே வணங்கல் வேண்டும்.

மேற்கூறினவற்றை யெல்லாம் கன்னியாகுமரித் தலத்தின் விசேடத்தைச் சொல்லும்படியாகக் கேட்ட கார்த்த வீரியார்ச்சுன அரசனுக்கு தத்தாத்திரிய முனிவர் கூறி மேலும் அரசனே நோக்கி, அரசே கன்னியாகுமரித் தலத்தின் மூன்று விசேஷமும் யான் சொல்லக் கேட்டா யுன்னிலு முயர்ந்த மன்னர் யார் இருக்கின்றனர் என்று தத்தாத திரிய முனிவர் கூறுதலும், அம்முனிவரை அரசன் வணங்கிப் பொன்ஞற் செய்த புதிய ஆசனத்திலேற்றி யபிடேகமும் அருக்கிய முதலிய உபசாரமுஞ் செய்வித்துப் பிராமணருக்கெல்லாம் வேண்டிய தானங்களும் கொடுத்து வணங்கி நின்றனன். முனிவர் அரசனுக்கு ஆசி கூறித் தமதிருப்பிடஞ் சென்றனன். அரசனும் கன்னியாகுமரித் தல புராண மான்மியங் கேட்டதிஞல் சகல சித்திகளும் பெற்று வாழ்ந்திருந்தார்களென்று சூத முனிவர் சவுனகாதி முனிவருக்ருச் சொல்லிப் பின்னுஞ் சொல்லுவர். கன்னி நாயகி வீற்றிருகிகுங் கன்னியாகுமரித் தலபுராணங் கேட்க வேண்டுமாஞல் விஷ்ணுவாலயத்திலேனும், சிவாலயத்திலேனும், பிற ஆலயங்களிலேனும் கேட்கவேண்டும். திரவியம், மக்கள், ஐசுவரியம், கல்வி, மோக்ஷம், இவைகள் விரும்பிஞேர்கள் பக்தியுடன் கேட்பவர்களாயில் அவர்களுக்கு உடனே சித்திக்கும். இந்தப் புராணத்தைப் படிப்பவர், இதற்குப் பொருள் சொல்பவர், இதைக் கேட்ப்பவர் எழுதுவோர் பொருள் கொடுத்து எழுதுவிப்போர் அக்கினிட்டோமஞ் செய்த பலனே அடைவாராஞல் யான் சொல்வ

தேதிருக்கின்றது என்றனர். அது கேட்டு சவுளகாதியர் மனமகிழ்ந்து சொல்லுவார். இப்புராணங்கேட்டு உம்மாலே அளவில்லாத மான்மியமடைந்தோம். பூருவம் புண்ணியஞ் செய்தோமென்று தெரிந்தனன் என்று பலவாறுகவும் உபசாரஞ் சொல்லினர். அவருக்கு சூத முனிவரும் ஆசி சொல்லி தமதாசிரியராகிய வியாச முனிவரிடத்துக்குச் சென்றனர்.

மாத மூன்று மழை பொழிக, பசுக்கள் வாழ்க, பிரஜைகள் வாழ்க, அரசன் செங்கோல் வாழ்க, கற்புடைய பெண்கள் வாழ்க, சிவாலயம் வாழ்க, விஷ்ணுவாலயம் வாழ்க, கன்னியாகுமரி வாழ்க, கன்னி நாயகி ஆலயம் வாழ்க,

**கன்னியாகுமரி ஸ்தல புராணம் முற்றிற்று.**

---

